Ūl̲iyan̲

Malar 9, ital̲ 24

March 05, 1929

Record no. 148

சென்னைப் பதிவு எண் கடுoக.          கக பக்கங்கள்.          தந்தி விலாசம்:—"ஊழியன்",

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... ரூ ௫—0—0
அறுமாதச் சந்தா ... ரூ ௩—0—0
வெளிநாடு வருடச்சந்தா ... ரூ ௬—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்.
அங்குலம் க-க்கு வாரம் க-க்கு 0—அ—0
நீடித்த விளம்பரம் அங். க-க்கு க—0—0
ஒப்பந்த விளம்பர விகிதத்திற்கு எழுதவும்.

## The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க!          அல்லவை ஆழ்க!!

மலர், க. } காரைக்குடி, விபவ-ஞு மாசி-மீ உ௨-ட செவ்வாய்க்கிழமை. { இதழ், உச.

## மலர் மணம்.

### பாரதியின் வேதாந்தம்.

(தி. ஜ. ர.)

"இனிமையை இயல்பாகக் கொண்ட வானவ! நொய்ய விச் சிந்தனைக்கு மன்னித் தருள்க! இவ்வுலகம் வெறும் சூன்யமாக—அகண்ட, மங்கலான, ஒளியற்ற, ஆழ்ந்த, ஜனசஞ்சாரமற்ற சூன்யமாகவிருக்குமானல்—இறைவனும், வானுலகும், மண்ணுலகும் வெறும் பொய்யாகவிருக்குமானல்—!" என்று பொருள்பட, ஷெல்லியென்னும் கவி ஓரிடத்தில் உளங் கலங்குகிறார். ஷெல்லி ஓர் ஆங்கிலக் கவி ரத்தினம். அவருடைய கவிகளைப்பற்றிப் பொதுவாக ஒன்று கூறப்படுவதுண்டு. ஏக்கமே அவரது கவிதையில் வேகம் நிறைந்தது. அவரது கவிகளிலிருந்து ஓர் வேதாந்தாந்தத்திற்கு உருக்கொடுக்க வியலுமானல், அது ஏக்கத்தை அஸ்திவாரமாகக் கொண்டதாகவேயிருக்கும். அவரது கவிகளுள்ளே, மிகச் சிறந்ததும், அழகு நிறைந்ததுமான "வானம்பாடி"யிலே, "நாங்கள் முன்னும் பின்னும் நோக்கி, இல்லாப் பொருளுக்கு ஏங்குகிறோம். எங்களது மனப்பூர்வமான நகைப்பிலே சிறிது துன்பமும் இணைந்திருக்கின்றது. எங்களது மிக இனிமையான கீதங்கள் மிகுந்த துக்ககரமான சிந்தனைகளைக் கூறுவனவாகும்" என்று, அவர் மறுக்கிறார். கவி ஷெல்லி, சோகத்தைத் துணைக்கொண்ட ஓர் வேதாந்தி.

* * *

தமிழ்நாட்டுத் தவப்புதவனான, பாரதியார், இதற்கு நேர்மாறுபட்டவர். கவிகளின் கவிதாவேசத்திலே, பிரவாகமெடுக்கும் இசைத்தேனை நாம் மாந்துவதோடு நின்றுவிடவேண்டும என்பது உண்மையே. ஆனல், உண்மைக்கவிகள், உணர்ச்சி மூலம் உண்மைகாணும் வேதாந்திகளேயாவர் என்பதை நாம் மறத்தலாகாது. எனவே, அவர்களது கவிதைகளில் மின்னும் தெய்வத ஜோதியை நாம் காண முயல்வதில் தவறு ஏதுமில்லை. நமது பாரதியின் கவிதாவேசத்தில், நாம் காணக்கூடிய தத்துவம் யாது? "வாழ்வோர் வாழ்வென் றுரைக்கும் மேற்பூச்சான இத்திறையைத் தூக்கிவிடவேண்டாம்" (Lift not this painted veil which those who live call life) என்று அவர் இரங்கவில்லை. வாழ்வு அவருக்கு உண்மைக் காட்சியையே நல்குகிறது.

* * *

நிற்பதுவே, நடப்பதுவே, பறப்பதுவே
நீங்களெல்லாம்,
சொற்பனந்தானே?—பல
தோற்ற வயக்கங்களோ!
கற்பதுவே, கேட்பதுவே, கருதுவதே
நீங்களெல்லாம்
அற்ப மாயைகளோ?—உம்முள்
ஆழ்ந்த பொருளில்லையே?

என்று நமது கவி திலகம் வினவுகிறார். உலகம் மாயையா, வெறும் கனவுதானா? வாழ்வைப் பொருளற்ற மேற்பூச்சான சூனியமாக, பாரதியாரின் கவிதையுள்ளம் காணவில்லை. எனவே,

"காலமென்றே யொருநினைவும் காட்சி
யென்றே பல நினைவும்-
கோலமும் பொய்களோ?—அங்கு
குணங்களும் பொய்களோ?
சோலையிலே மரங்களெல்லாம்
தோன்றுவதோர் விதையிலென்றால்,
சோலைபொய்யாமோ?—இதைச்
சொல்லொடு சேர்ப்பாரோ?"

என்று எள்ளி, மேலும்,

"காண்பதெல்லாம் மறையுமென்றால்
மறைந்ததெல்லாம் காண்பமன்றோ?
வீண்படு பொய்யிலே—நித்தம்
விதி தொடர்ந்திடுமோ?
காண்பதுவேயுறுதிகண்டாய்;
காண்பதல்லாலுறுதியில்லை;
காண்பது சக்தியாம்—இந்தக்
காட்சி நித்தியமாம்"

என்கிறார் பாரதியார்.

* * *

காலம் ஓர் சோலை; நிற்பனவும், நடப்பனவும், பறப்பனவும், அச்சோலையிலே காட்சி தரும் தருக்களாகவிருக்கின்றன நமது கவி திலகத்துக்கு. வானகமும், இளவெயிலும், மரச்செறிவும் கானலினீரல்ல; காட்சிப் பிழையுமல்ல. அகண்ட காலச்சோலையின் பூரண தரிசனம், அவரது கவிதைக் கண்ணுக்குப்புலனுகின்றது. அவற்றின் நித்தியத்துவத்தை, உட்பொருளை, அவர் காண்கிறார். விண்ணகத்தே ஒளி செய்யும் நட்சத்திரங்களைப் பற்றிய ஓர் விஞ்ஞான உண்மையை நீங்கள் அறிவீர்களா? நாம் இன்று காணும் அந்த நட்சத்திரங்கள், உண்மையிலே இந்நேரம் அங்கு இருக்கின்றனவோ இல்லையோ என்ற ஐயம் உங்கட்கு எழுந்ததில்லையே! எத்துணையோகோடி ஆண்டுகட்கு முன்னர் அவையிருந்த ஒளி நிலையே இன்று நமது கண்களுக்கெட்டுகின்றது என்ற விந்தைதரும் உண்மையை நீங்கள் அறிவீர்களா? இந்தக்காட்சியிலே காலமும் தூரமும் ஒன்றுபடுவது உங்கட்குப் புலனுகின்றதா? ஆயின், பாரதியார் தரிசித்த காலச்சோலையையும் உங்கள் கற்பனை காணுவது அசாத்தியமல்ல. சோலைக்குள்ளே காட்சிப்பொருள் யாவும் அடங்கும். எனவே, அச்சோலை பொய்யாமோ?

* * *

பாரதிக்கு காணுங்காட்சி நித்தியம்; வாழ்வு நித்தியம். எனவே, அவரது கவிகளிலே, இல்லாப் பொருளுக்கு ஏக்கம் இல்லை. அவரது கவிகள் மனச் சோர்வுக்கு மகிமையளிக்கவில்லை. பாரதிக்கு, சோர்வு என்பதுதான் வீண் மயக்கம்; கனவாகும். அவர் வேண்டுவது சுதந்திர இன்பங்கள். உயிருக்கு ஊக்கமளிப்பன, உறுதி பயப்பன, அவரது பாடல்கள். "எத்தனைகோடி யின்பங்கள் வைத்தாய்—எங்கள், இறைவா! இறைவா! இறைவா!" என்று அவர் பரவச வெறி கொள்ளுகிறார். சோர்ந்து கிடக்கும் அடிமைத்தளையிலே பிணிப்புண்டு நிற்கும் நாட்டிலே, திக்கற்ற நினைப்பை உதறித் தள்ள ஆவேசம் உண்டாக்கத் தக்கனவாக அவரது பாடல்கள் இருப்பதன் காரணம், அவர் உலக வாழ்வின் உண்மையைக் கண்டதுதான்.

* * *

அவர் பெருங்காரியங்களிலே ஆர்வம் நிறைந்து, அவற்றை இயற்ற அவாவாதமும் ஆத்திரமுறுகின்றார்.

"சிங்களத் தீவினுக்கோர்
பாலமமைப்போம்;
சேதுவை மேடுறுத்தி
வீடு சமைப்போம்;
வங்கத்தி லோடிவரும்
நீரின் மிகையால்,
மையத்து நாடுகளில்
பயிர் செய்குவோம்"

என்றும் இன்னும் பல பெருந் தொழில்களைச் செய்ய இச்சை கொண்டும், கவிதை வெறியுடன், அவர் அடுக்குகிறார். அன்றியும்,

"சிந்து நதியின் மிசை நிலவினிலே
சேரநன் நாட்டிளம் பெண்களுடனே
சுந்தரத் தெலுங்கினில் பாட்
[டிசைத்துத்
தோணிகளோட்டி விளையாடி
[வருவோம்"

என்று, இன்பக்களியாட்டு ஆசையையும் இடையே உற்சாகத்துடன் வெளிக்கொட்டுகிறார்.

* * *

மண்ணிற் பிறந்தாயிற்று; வாழ்வை வாழ்ந்தாக வேண்டும். உழைப்போம்; ஆனந்த மனுபவிப்போம். யாவும் பொய்யோ என்று ஏங்குவானேன்? காணும் காட்சியெல்லாம் பொய்யெனில், காணுமின்பம் யாதுமிருப்பதாக, பாரதி எண்ணவியவில்லை. அடிமை வாழ்வை, காணுமுலகிலே அவர் வெறுக்கிறார். "விடுதலை"ச் சங்கு அவருடையது.

"காக்கை குருவி யெங்கள் ஜாதி; நீள்
கடலுமலையு மெங்கள் கூட்டம்;
நோக்குந்திசையெலாம் நாமன்றி
[வேறில்லை;
நோக்க நோக்கக் களியாட்டம்"

என்று அவர் ஆர்ப்பரிக்கிறார்.

* * *

இன்னும், பாரதியார் கீதைக்கு எழுதியுள்ள உரையின் முகவுரையிறுதியில் பின்வருமாறு எழுதுவதையும் இங்கு, நோக்கலாம்: "உலகமெல்லாம் கடவுள் மயம் என்ற உண்மையான வேதாந்தத்தைக் கீதை ஆதாரமாக உடையது. மாயை பொய்யில்லை. பொய் தோன்றாது. பின் மாறுகிறதே யெனில், மாறுதல் மாயையின் இயற்கை. மாயை பொய்யில்லை. அது கடவுளின் திருமேனி. இங்கு தீமைகள் வென்றொழித்தற்குரியன. நன்மைகள் பெறுதற்கும் எய்துதற்கும் உரியன. சாயுஜ்யயாகம்—கடவுளிடம் தீராத மாறாத பக்தியால்—யோகத்தை எய்துவீர்கள். எல்லா ஜீவர்களையும் ஸமமாகக் கருதக் கடவீர். ஆனல், விடுதலையடைவீர்கள். ஸத்திய விரதத்தால் ஆனந்தத்தை அடைவீர்கள். இல்லறத் தூய்மையால் ஈசத்தன்மை யடைவீர்கள்." பாரதியின் கவிகள் யாவற்றிலும், இவ் வேதாந்தமே உயிர் நாடியாயிருக்கின்றது. "நாட்டிலே யின்பங் கூட்டி வைப்பீரே! நாடும் இன்பங்கள் ஊட்டி வைப்பீரே!" என்பது அவரது உபதேசம். பாரதிக்கு மனிதவாழ்வு ஓர் வீணை. அங்ஙனமாக,

"நல்லதொர் வீணை செய்தே, அதை
நலங்கெடப் புழுதியில் எறிவ
[துண்டோ?"

## மதிப்புரை.

### ஆனந்தவிகடன் வருட அநுபந்தம்.

[வெளியிட்டோர்:- ஆனந்தவிகடன் காரியாலயத்தார், உசச, தங்கசாலை வீதி, சென்னை. விலை அணா ச.]

"ஆனந்தவிகட"னின் இச்சிறிய வருட அநுபந்தத்தைக் குறித்து முதலில் சிலவார்த்தை. "ஆனந்தவிகடன்" களங்கமற்ற இன்பம் அளிக்கும் நகைச்சுவை பயக்கும்நோக்கங்கொண்டவன். இவ்வநுபந்தத்திலுள்ள கட்டுரைகள், அந்நோக்கத்தை முற்றிலும் பூர்த்தி செய்வனவாயிருக்கின்றன என்பது சிறிதும் மிகையாகாது. நகைச் சுவையோடு கூட, கட்டுரைகள் யாவும் பொருள்வன்மையும் பெற்றுத் திகழ்கின்றன. பொதுவாக, இதுவரைவெளிவந்த தமிழ்ப் பத்திரிகைகளின் ஆண்டு அநுபந்தங்களிலேயே, இது உயர்ந்ததென்று கூறினும் பொருந்தும்.

இதில் அடங்கிய கட்டுரைகளுள் சாதாரண நிகழ்ச்சிகளை அடுக்கி வருணித்து, அவைகளின் பதவிகளை உயர்த்துவதிலும் நகைச் சுவையிலும் எஸ். வி. வி. அவர்கள் எழுதியுள்ள "கோயில்யானை" என்ற கட்டுரைக்கு இந்த அநுபந்தத்தில் பிரதான ஸ்தானம் அளிக்கலாம். "கோயில் யானை" முதல் வரி துவங்கி, இறுதிவரி முடிய, அடங்கா நகைப்பைத் தருகின்றது. அடுத்தபடியாக, "குழந்தைகள் காங்கிரஸ்" வருகின்றது. "குழந்தைகள் காங்கிர"சும் விடா நகைப்பைப் பயக்கின்றது. திரு என். தண்டபாணிபிள்ளை எழுதியிருக்கும் "சிற்றுண்டி மகாநாடு"ம் மற்றுமுள்ள சிறுவிகடங்களும் நகைச்சுவை பயப்பனவே.

"கல்கி" கனவில் கண்ட "யானை குட்டி போட்டதும் குதிரை முட்டையிட்டதும்" கற்பனையழகுவாய்ந்ததோர் அரிய சித்திரமாகும். "கொல்"லென்று நகைக்கச்செய்யக்கூடியதல்ல அக்கட்டுரை; எனினும், படிக்கும் பொழுது மயிர்க்கூச்சல் உண்டாகுமாறு செய்யக்கூடிய தன்மை பெற்றிருக்கிறது இச்சித்திரம். இந்தக் கற்பனையில் சோகமும் நகைச் சுவையும் இன்பம் ஊட்டும் அளவில் கலக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் கற்பனை, காங்கிரஸைப்பற்றிய விசித்திர, விநோத, சோக ரசமும் எழுத்து நீரோட்டமும் நிறைந்த கற்பனையாகும்.

"பார்தியின் நகைச்சுவை" நல்ல முயற்சி. ஆனால் "கல்கி"யின் வழக்கமாயுள்ள கைத்திறன் முழுதும் இதில் காணப் பெறவில்லை.

"தமிழ்த் தொண்ட"னின் வசந்த மோஹினி, அருமையான ஒலிச் சித்திமாகும். குறத்தியின் கீதங்கள் வெறும் குறி சொல்லுவன மட்டுமல்ல; அவைகளில் காவியச் சுவையும் இலக்கியச் செழுமையும் இயற்கையின் மாண்பும் நிரம்பிக்கிடக்கின்றன. இந்தக் கீதங்களில் பொறுக்கியெடுத்து, அவைகளின் வனப்பைக் கதையின் வடிவத்தில், சங்கீதமும் சித்திரமும் நிறைந்த சொல்லடுக்குகளால், தமிழர்களுக்கு எடுத்துக் காட்டிய நற்றொண்டு, தமிழ்த்தொண்டனதாகும்.

"கம்ப நாடார்" ஆசிரியரின் "கம்ப சூத்திர"க் கட்டுரை, தமிழுலகத்தில் பழமை கொண்டதாயினும் "ஆனந்த விகடன்" நண்பர்களுக்குப் புதிது; எனவே, தேவையானது.

"வ. ரா." அவர்கள் எழுதியுள்ள "குலசேகரனும் கோமகளும்" என்ற சிறு நாடகம், இச்சிறு அநுபந்தத்தின் நடுநாயகமாகும். உள் வலிமையும், சீலமும் வாய்ந்த ஓர் ஆணும் பெண்ணும் கொள்ளும் காதலின் இயற்கைச் சித்திரமாகும் இது. காம வெளியீடுகளை, அவர்களின் காதல் துணைக்கொள்ளவேயில்லை. இருவரதும் உள் சக்தி முதலில் முட்டிக் கொள்ளுகின்றது. இறுதியில், இருவரும் ஒருவரோடொருவர் ஒட்டிக் கொள்ளுகிறார்கள். வ. ரா., வின் நாடகப் பாத்திரங்கள் தாமாக இயங்குகிறார்கள். இரண்டு வலிமை கொண்ட பாத்திரங்களைச்சிருஷ்டித்து அவர்களைச் சந்திக்கச்செய்து, பின்னர் அவர்களைத் தொடர்ந்து செல்லும் வேலையை அவர் மேற்கொள்ளுகிறார் என்றே கூறவேண்டும். வ. ரா. அவர்களின் வழக்கமான நகைச் சுவையும், நடை வன்மையும், பொருளழகும் இந் நாடகத்திலும் இலங்குகின்றன.

ஏனைய அநுபந்தங்கள், படிப்பவர்களைத் தூங்கச்செய்யும். பிரஸ்தாப அநுபந்தமோ, வாசகர்களின் எல்லா உணர்ச்சிகளையும் எழுப்பி, அவர்களுக்குப் போதிய உணவும் இன்பமும் அளிக்கின்றது.

### ஆனந்தபோதினி வாரப்பத்திரிகை.

[ஆசிரியரும் வெளியிடுவோரும்:— என். முனிசாமி முதலியார், ஆனந்த போதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. கசஎ, சென்னை. உள்நாடுவருடச் சந்தா ரூ ந—0—0; வெளிநாடு வருடச் சந்தா ரூ ச—0—0.]

இது வரையில் மாதப்பத்திரிகை நடத்திவந்த, ஆனந்த போதினி ஆசிரியர், இவ்வாரப் பத்திரிகையைத் துவங்கியிருக்கிறார். இதன் முதல் இதழில் பல கட்டுரைகள் காணப்படுகின்றன. வாரச் செய்திகளும் திரட்டி அளிக்கப்பட்டிருக்கின்றன. "அரசியல் விஷயத்திலாவது சமூக விஷயத்திலாவது உள்ள கட்சிப் பிணக்குகளுக்கும் ஆனந்த போதினிக்கும் வெகுதூரம். ஆனால், உண்மையை நடுநிலையில், நின்று வெளிப்படுத்த ஒருபோதும் பின்வாங்காது" என்று தலையங்கத்தில் கூறப்படுகிறது. இது களிக்கத்தக்கதேயாகும். இந்நெறியில், இப்பத்திரிகை உழைக்குமென நம்புகின்றோம்.

### காசிப்பூர் ரோஜாப் பன்னீர்.

[நிர்வாக ஏஜண்டுகள்:—பாக்தாதி அண் கோ., காரைக்குடி.]

இந்தப் பெயர் கொண்ட ரோஜாப் பன்னீர் "சாம்பிள்" சிறியசீசா ஒன்று கிடைக்கப் பெற்றோம். நல்ல வாசனையிருக்கிறது. சுத்தமாக, பூக்களைக் கொண்டு, இது தயாரிக்கப் பெற்றிருப்பதாக அறிகிறோம்.

## ஓர் அதிசயம்.

### ஒன்பதுவயது உபாத்தியாயர்.

இங்கிலாந்திலுள்ள ஷெப்பீல்டில் ஆஸ்டின் எக்லீ என்னும் ஒன்பது பிராயச்சிறுவன் ஒருவன் ஒரு கலாசாலை வைத்து நடத்துகிறான். இந்த விந்தையைப்பற்றிய பின்வரும் விபரம், இங்கிலாந்திலிருந்து வரும் "டெய்லி கிரானிகிள்" என்ற பத்திரிகையில் காணப்படுகின்றது:—

(இவன் படிக்கும்) சாதாரணப்பள்ளிக்கூடம் முடிந்ததும், இவனது பள்ளிக்கூடத்தில் பாடங்கள் போதிக்கப்படுகின்றன. பூகோளம், கணக்கு, சங்கீதம், மனப்பாடம்செய்த விஷயங்களை அபினயத்துடன் சொற்பொழிவு செய்தல் ஆகிய விஷயங்கள், இந்த ஒன்பது பிராய இளம் உபாத்தியாயரால் போதிக்கப்படுகின்றன. இந்தப் பள்ளிக்கூடத்திற்கு ௩0 குழந்தைகட்கு மேல் வருகிறார்கள்.

(இவன்படிக்கும் அசல் பள்ளிக்கூடமான) லங்காஸ்டிரியன் கலாசாலைக்கு, ஷெப்பீல்டு நகர சபை மேயர்ப் பிரபு, சமீபத்தில் விஜயம் செய்த பொழுது, ஆஸ்டினின் முயற்சியைப் பற்றிக்கேள்வியுற்று, அவர் கூறியதாவது:—"நீ மிக நேர்த்தியான தொண்டைச்செய்கிறாய். ஆகையால், நகரமண்டபத்திற்கு வர, உனக்கு நான் அழைப்பு விடுக்கப்போகிறேன்." இந்த வாக்குத்தத்தத்தின்படியே, நகரமண்டபத்தில், மேயரின் கூடத்திற்கு ஆஸ்டின் கலாசாலை மாணவர்கள் சென்றார்கள். அரசர்களும் அரசிகளும் விருந்துண்ட அவ்விடத்திலே, இவர்களுக்காக, கலாசாலைகளின் பிரதமஇன்ஸ்பெக்டரும், தலைமை உபாத்தியாயர்களும், வேறு பல பிரபலஸ்தர்களும் காத்துக் கொண்டிருந்தார்கள்.

ஆஸ்டின் உடனே தயங்காமல், "ஓ! நமது சமையலறையைவிட இவ்விடம் பெரிதாயிருக்கிறதே!" என்றான். தேநீர்ப்பானம் நடந்த பொழுது, "அன்பார்ந்த ஐயா" என்று மேயரை விளித்து ஆஸ்டின் ஓர் பிரசங்கம் புரிந்தான்.

## பெண்கள் ராஜ்யம்.

("டிட்பிட்ஸ்" என்ற பத்திரிகையில் பின்வரும் கட்டுரை காணப்படுகிறது.)

சகாரா பாலைவனத்தின் நடுமையத்தில், ஓர் அதிசய நாடு இருக்கின்றது. பரப்பளவில் உருஷியாவைப் போன்றது. இந்நாட்டினர் துவாரெக்ஸ் என்னும் ஜாதியினர். வெளியுலகத்தவரோடு சம்பந்தஞ் செய்து கொள்ளுவதை, இந்நாட்டவர் வெறுக்கின்றார்கள்.

பிறரைத் தாக்கும் தன்மை வாய்ந்த பெர்பெர்ஸ் என்னும் ஜாதியினருக்கு இவர்கள் உறவுடையோர் என்று கருதப்படுகிறது. பாலைவனத்தை ஒட்டகைமீது கடந்து செல்ல முயலும் கூட்டத்தை, இந்த ஜாதியினர் தாக்கிக் கொள்ளையிடுவதில், உலகப் பிரசித்தி பெற்றவர்கள். ஆனால், துவாரெக்ஸ் ஜாதியினர் மிகவும் அழகுடையோராயிருக்கின்றார்கள். இவர்கள் ஒல்லியான, இலட்சணம் பொருந்திய உடலும், உயரமும் வாய்ந்தவர்கள். இவர்களில் அநேகர் ஏழு அடி உயரம் வளர்ந்திருக்கிறார்கள்.

கால்நடைகளோடு நிலையற்றுத் திரிந்து கொண்டே வாழ்வு நடத்தும் இவ் வகுப்பினரைக் குறித்து, மிகவும் விந்தையான வதந்திகள் பற்பல சமயங்களில் பரவியுள்ளன. ஆண்கள் முக மூடிதரிப்பதாகவும், பெண்கள் இஷ்டப்படி ஆண்கள் நடப்பதாகவும் சில வதந்திகள் கூறின. ஆண்கள் வீட்டுக் குடித்தனத்தை நடத்துவதாகவும், பெண்கள் ராஜாங்கக் காரியங்களைக் கவனித்துக் கொள்ளுவதாகவுங்கூடச் சில வதந்திகள் கூறின.

உலகத்தின் பலவிடங்களுக்கும் சென்று ஆராய்ச்சி செய்பவரும் புராதனச் சின்னங்களை ஆய்பவருமான கவுன்ட் பைரன் புரோராக் என்பவர் சமீபத்தில், இந்த விந்தை நாட்டுக்குச் சென்று, (லண்டனுக்குத்) திரும்பியுள்ளார். இந்நாட்டு வல்லோரைக் குறித்த கதைகளிற் பல உண்மையானவையே யென்றும், சில குறைவாகவும் இருக்கின்றன என்றும், இவர் கூறுகிறார்.

இந்த ஜாதியில், காதல் நோய்வாய்ப்பட்ட கன்னிகைகளின் வேண்டுகோள்களுக்கு, துவாரெக் ஆடவர்கள் எவ்வாறு பதில் அளிக்கிறார்கள் என்பதை அவர் கூறுகிறார். மாலை உணவுக்குப் பின்னர், மின்னிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்களின் மந்திர சக்தியால் விரக வேதனை கொண்டு வீட்டிலிருந்து சில கஜதூரம் எட்ட ஓர் தனித்த இடத்துக்கு, கன்னிகை செல்லுகிறாள். நேசன் போன்ற இருட்டிலே, அவர்கள் அங்கே தன் உள்ளத்தைத் திறந்து, அல்லாவுக்குக் காட்டுகிறாள். தீய உலகின் தீய நெறிகளினின்றும் தான் இரட்சிக்கப் படுவதற்காக, ஓர் ஆடவனைத் தெரிந்தளிக்குமாறு, இறைவனை அவள் பிரார்த்திப்பாள்.

இக் கன்னிகைக்கு அண்டை அயலிலிருந்து, திடீரென்று ஓர் வாலிபன் சில சமயம் இவளது காதலைப் பெறுவதற்காக, இவள் முன்னே மெல்ல வந்துசேருகிறான். இது தற்செயலான நிகழ்ச்சியேயோ? இம்மனிதன் அழகானவனாகவும் இளைஞனாகவும், செல்வமுடையவனாகவும் இருப்பானாகில், இவன் சீக்கிரம் தனது நேசக் கணவனாக ஆகிவிடுவானென்று கன்னிகை நம்புகிறாள்.

"சுயம்வரம்" நடத்தும் வழக்கம் இந்த ஜாதியினரிடம் ஊன்றியிருந்து வருகிறது. இரண்டு மூன்று கூட்டத்தைச் சேர்ந்த கன்னிகைகள், "சுயம்வரம்" நடத்துகிறார்கள். தங்களை மணந்துகொள்ள விரும்பும் வாலிபர்களைத் தெரிந்துகொள்ளுவதற்காக, இது கைக்கொள்ளப்பட்டிருக்கிறது. தங்கள் முடிவைச் சொல்லப்போகும் பெண்களின் முன்னே, நல்லுடையணிந்து, அழகாக நறுக்கப்பட்ட தாடியுடன், நன்கலங்கரிக்கப்பட்ட குதிரைகள்மீது ஆடவர்கள் செல்லும் பொழுது, ஓர் அருங்காட்சியாகவிருக்கும் என்று சொல்லப்படுகிறது.

அரபியர் இளமை மணம் செய்யும் வழக்கத்திற்கு நேர் விரோதமாக, துவாரெக் ஜாதி ஆடவர் ஏறக்குறைய முப்பது வயது வரையில் மணமாகாதிருக்கின்றார். இதன் காரணத்தைக் காண்பது கடினமல்ல. மணமாகும் புருஷன் குறைந்தது ஆறு ஒட்டகைகளும், மணப்பெண்ணின் மண உடையும், ஒரு நீக்ரோ அடிமைப் பெண்ணும் சம்பாதித்திருக்க வேண்டும்

துவாரெக் ஆடவர்கள் கலியாணம் செய்துகொண்டு விட்டதும், அவர்களது அந்தஸ்துப் போய்விடுகிறது, ஏனெனில், புருடர்களை அவசியமாயிருக்கும் தீமைகள் என்றே பெண்கள் கருதுகிறார்கள். குழந்தைகளின் தந்தைகளாக அவர்கள் இருப்பதனால் தான் அவர்களைச் சகித்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது என்று பெண்கள் மதித்திருக்கிறார்கள். தங்கள் வம்சத்தில், புருஷரான முன்னோர் ஒருவர் பெயரைக் கூறினால், இந்தவினோத மானஜனங்கள் தாங்கள்பெரிதும் அவமதிக்கப்பட்டதாகக் கருதுவார்கள்!

இந்த முரட்டுமனிதர்கள்மீது பெண்கள் எவ்வாறு இத்துணை அதிகாரத்தைப் பெற்றுவிட்டார்கள் என்பது அதிசயமாகவேயிருக்கிறது. வாரிசு பாத்தியமும், சொத்தும் குழந்தைகட்குத் தாயின் பெயராலேயே மாறுகின்றன. குழந்தைகளின் கல்வியைப் பெண்கள் கவனித்துக்கொள்ளுகிறார்கள். ஆடவர்களைவிட, பெண்கள் அதிக மனோ வலிமை பெற்றிருப்பதால், ஆடவரை ஆள அவர்களால் இயல்கின்றது என்று சொல்லலாம்.

## காரைக்குடி முனிசிபாலிட்டி.

இம்மாதம் ௧௮-ம் தேதி வெள்ளிகிழமை மாலை ௫-மணிக்கு காரைக்குடி முனிசிபல் கௌன்சிலின் கூட்டம் தலைவர் திருவேங்கட முதலியார் அவர்கள் தலைமையில் கூடிற்று.

கூட்ட ஆரம்பத்தில் சைமன் கமிஷனுக்கு உபசாரப் பத்திரம் அளிக்கச் சென்ற நகர சபைப் பிரதிநிதிகள் அதுபற்றிய விபரத்தை எடுத்துரைக்கும்படியாக தலைவர் கேட்டுக்கொண்டார். அப்போது ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் "பெப்ரவரி ௧௫-ம் நாள் எழும்பூர் மேசனிக்லாட்ஜ் கட்டிடத்தில் வைத்து நாங்கள் சைமன் கமிஷனுக்கு உபசாரப் பத்திரம் அளித்தோம். அதற்கு அவர்கள் மிகவும் நன்றி பாராட்டுவதாகச் சொன்னார்கள்." என்று கூறினர். பின்னர் அவ்வுபசாரப் பத்திரத்தின் பொருளை 'ஜஸ்டிஸ்' பத்திரிகையில் வெளியானபடி வாசித்துக் காட்டப்பட்டது. அதன் விபரம் வருமாறு:—

"இராமநாதபுரம் ஜில்லா ஸ்ரீவில்லிப்புத்தூர், காரைக்குடி முனிசிபல் சபைத் தலைவர்களும் அங்கத்தினர்களும் எங்கள் இராஜதானிக்கு, தங்களை வரவேற்க மிகவும் மகிழ்வெய்துகின்றார்கள். இந்திய நாட்டிற்குத் தாங்கள் வந்து சேர்ந்தது முதல் தங்கள் செயல் முறைகளை மிகவும் கவனித்துக் கொண்டு வந்ததால், பிரிட்டிஷ் பார்லமெண்டின் முன்னால் எங்களது உரிமைகளை நன்றாக எடுத்து விளக்குவீர்களென்பதில், எங்களுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. தொன்மை பூண்ட, சரித்திர சம்பந்தமான இந்த இராஜதானிக்கு நீங்கள் விஜயஞ் செய்ததானது எங்களால் என்றுமே மறக்கக் கூடியதன்று. இந்நிகழ்ச்சியானது எங்கள் நாட்டின் வாலாற்றில் முக்கியமான தொன்றாகும். கனவான்களே! தாங்கள் எங்களிடையே வதிவதானது தங்களுக்குப் பெரும் மகிழ்ச்சியைக் கொடுக்குமென உறுதி கூறுவதோடு, எங்கள் இராஜதானியைப் பற்றிய ஞாபகம், தங்கள் உள்ளத்தில் என்றுமே இருக்கும் என்றும் திடமாக நம்புகிறோம்.

"உபசாரப் பத்திர மளிக்கும் இவ்வொப்பற்ற உரிமை யளித்ததற்கு யாங்கள்என்றுமே தங்கள்பால் கடைப்பாடுடையோம்."

தலைவர்:—நமது கௌன்சில் சார்பாக தாங்கள் எடுத்துக்கொண்ட பிரயாசைக்கு நாங்கள் மிகவும் நன்றி பாராட்டுகின்றோம்" பின்னர் ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார் விதிப்படி மூன்று நாட்களுக்கு முன்னர் கூட்ட சம்பந்தமான அறிக்கை (நோட்டீஸ்) கொடுக்கவில்லையாதலால், கூட்டத்தை ஒத்திவைக்க வேண்டுமென்று சொன்னார். திரு. சி. மு. அரு. முத்துராமன் செட்டியார் அவர்கள் போதிய நாட்களுக்கு முன்னரே தமக்கு அறிக்கை கிடைத்துளது என்று கூறினார். கடைசியாக, தலைவர் அவர்களால் அங்கத்தினர்கள் விருப்பத்திற்கிணங்க, கூட்டம் ஒத்தி வைக்கப்பட்டது.

### விசேஷக்கூட்டம்.

சென்ற சனிக்கிழமை மாலை ௪ மணிக்கு முனிசிபல் சபையில் ஓர் விசேஷக் கூட்டம் முனிசிபல் காரியாலயத்தில் நடைபெற்றது. அத்தருணம் பத்து அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தனர். அயல் ஊர்களிலிருந்து நகருக்குள்வரும் மோட்டார் பஸ்களுக்கும் வாடகைக்காரர்களுக்கும் லைசன்சு கொடுக்கும் விஷயம் வாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. அப்பொழுது விருதுநகர், திண்டுக்கல், மதுரை, ஸ்ரீரங்கம், சிதம்பரம், சேலம், முதலிய பத்து முனிசிபாலிட்டிகளிலிருந்து இது விஷயம்பற்றி வந்த கடிதங்கள் வாசிக்கப்பட்டன. கடைசியாக, நகர் எல்லைக்குள் செல்லும் மோட்டார் வண்டிகள் நகரிலிருந்து பிரயாணிகளை ஏற்றி அல்லது இறக்கிச் செல்லுவதாயின், லைசன்ஸ் கொடுப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது.

### டோல்கேட் ஏலம்.

வருகிற ஏப்ரல் முதல் தேதி முதல் காரைக்குடி முனிசிபல் டோல்கேட்டுகளை ஏலம்விடப்பட்டது. ஏலம் கூப்பிடுங்காலத்து ஏராளமான மக்கள்குழுமியிருந்தனர். ஏல வகையில் பலமான போட்டியுமிருந்தது. கடைசியாக பள்ளத்தூர் வைர வியாபாரி திரு. உ. அ. அரு. அருணாசலன் செட்டியார் பேருக்கு ௧,0௮,000 ரூபாய்க்கு டோல்கேட்டு குத்தகைவிடப்பட்டது.

## கப்பல்.

"ரஜூலா" க்கப்பல் இன்று சென்னைத் துறைமுகத்திலிருக்கிறது. நாளை புதன்கிழமை அங்கிருந்து புறப்பட்டு, நாகப்பட்டினம் வந்து, இம்மாதம் உஎ-உ ஞாயிற்றுக்கிழமை அவ்விடத்திருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும்.

"ரோஹ்ணு" க்கப்பல், பங்குனிமீ ௬-உ சனிக்கிழமை சென்னைத் துறைமுகத்துக்கு வரும். எ-உ புதன்கிழமை அவ்விடத்திருந்து நாகப்பட்டினம் வந்து, அங்கிருந்து, இம்மாதம் கக-உ ஞாயிற்றுக்கிழமை மலாய் நாட்டுக்குப் புறப்படும்.

"ரஜூலா" க்கப்பல், பங்குனிமீ கஎ-உ சனிக்கிழமை சென்னைத் துறைமுகத்துக்கு வரும். உக-உ புதன்கிழமை அங்கிருந்து புறப்பட்டு, நாகப்பட்டினம் வந்து, உ௫-உ ஞாயிற்றுக்கிழமை அவ்விடத்திருந்து புறப்பட்டு, மலாய்நாட்டுக்குச் செல்லும்

—

### ஓர் அதிசயக் கடிகாரம்.

டாம் ஸ்டட் முனிசிபல் சேவிங்ஸ் பாங்கியில் ஒரு கடிகாரம் இருக்கின்றதாம். அதில் வழக்கமாகக் குறிப்பிட்ட சமயங்களில் ஒரு ஷில்லிங் அதனுள் போட்டால் மட்டும்தான் ஓடுமாம். எனவே, மணி நின்றுவிடுவதானது வழக்கப்படி செலுத்த வேண்டும் தொகையைச் செலுத்த ஞாபகமூட்டுகின்றது.

* * *

### தொழிலில் மாறுபாடு.

இங்கிலாந்தில் கார்ஷாம் எனும் ஊரிலுள்ள பாடசாலையில் ஆண் குழந்தைகளுக்குச்சமையல்செய்தல், முதலிய பெண்களுக்குரிய தொழில்களும் அப்பாடசாலையில் கல்விபயிலும் பெண் குழந்தைகளுக்கு மரவேலை, முதலிய ஆடவர்களுக்குரிய வேலைகளும் பயில்விக்கப் படுகின்றனவாம்.

* * *

### விலை உயர்ந்த சமாதி.

உலகத்திலுள்ள சமாதிகள் யாவற்றிலும் பெரும் செலவு செய்து கட்டப்பட்டது. முகம்மதுநபியின் சமாதியாகும். அச்சமாதியிலுள்ள வைரம், சிவப்பு முதலிய இரத்தினங்கள் மட்டும் உ0-லட்சம் பவுன் விலை எனத்தெரிகிறது.

—

## புதுவருடப் பட்டங்கள்.

### சர். அண்ணாமலை ராஜாவானார்.

### ராவ்சாகிப் மரு. சு. வுக்கு ராவ் பகதூர் பட்டம்.

இவ்வருடத்தில் ஆங்கில அரசாங்கத்தாரால் புதுவருடப் பட்டமளிப்பு விபரம் சென்ற வெள்ளிக்கிழமை வெளியிடப்பட்டது. அதில் சில வருமாறு:—

சர். மு. அண்ணாமலை செட்டியாரவர்களுக்கு, பரம்பரையாக ராஜாப் பட்டம் அளிக்கப்பட்டுளது.

ராமநாதபுரம் தாலூகா போர்டு தலைவர் திரு. எம், இராஜம் நாயுடு அவர்களுக்கும் புதுக்கோட்டை திவான் கணபதி சாஸ்திரி அவர்கட்கும், மதுரை ஆர். கிருஷ்ணையர் அவர்கட்கும் ராவ்சாகிப் பட்டம், அளிக்கப்பட்டுளது.

காரைக்குடி ராவ் சாகிப் மரு. சுப்பையா செட்டியார், பகவந்தம் குப்தா, மதுரை வக்கீல் கிருஷ்ணன் நாயர் முதலியோருக்கு ராவ்பகதூர் பட்டம் அளிக்கப்பட்டுளது.

காரைக்குடி

மதுரை ராமனாதபுரம் ஜில்லா பார்ப்பனரல்லாத

### இளைஞர் மகாநாடு.

காரைக்குடி, மதுரை, ராமனாதபுரம் எனும் ஜில்லாக்களிலுள்ள பார்ப்பனரல்லாத இளைஞர் மகாநாடு, நிகழும் சுக்ல வருஷம் சித்திரை மாதம் நடுவில் நடாத்த வேண்டுமென காரைக்குடி ஜில்லா பார்ப்பனரல்லாத இளைஞர் சங்கத்தாரால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

இம்மகாநாட்டின் தலைமை வகிக்க இராமனாதபுரம் ஜில்லா போர்டு தலைவரும் சென்னை சட்டசபை அங்கத்தினருமான திருவாளர் W. P. A. சௌந்தர பாண்டியன் அவர்கள் இசைந்துள்ளார்.

பார்ப்பனரல்லாத இளைஞர் முன்னேற்றம் கருதிக் கூட்டப்படும் இம்மகாநாட்டிற்கு மதுரை, ராமநாதபுரம் ஜில்லாக்களிலுள்ள பார்ப்பனரல்லாத தலைவர்களும், ஜமீன்தார்களும், பிரமுகர்களும் ஏனைய பெரியோர்களும் வேண்டும் உதவிகள் யாவும் செய்யவேண்டுமெனம் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

மகாநாடு பற்றிய விபரங்களும் நடைமுறைகளும், பத்திரிகைகள் வாயிலாகவும், துண்டுப்பிரசுரங்கள் வாயிலாகவும் அடிக்கடி வெளியிடப்படும்.

மகாநாட்டிற்கு நன்கொடை அளித்த பிரமுகர்களின் பெயர்கள் ஊழியன் குமரன், திராவிடன் எனும் பத்திரிகைகளில் பிரசுரம் செய்யப்படும். மகாநாடு பற்றிய கடிதங்கள் அனுப்ப விரும்புவோர்; தீ. ம. நடராஜன் காரியதரிசி, பார்ப்பனரல்லாத இளைஞர் சங்கம், காரைக்குடி, என்ற விலாசத்திற்கு எழுதவும்.

பார்ப்பனரல்லாத இளைஞர் சங்கத்தார்,
காரைக்குடி.

## தந்தி.

பினாங்கு, [illegible] உக-உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | [illegible] |
| ஈயம் விலை | [illegible] பன்னிரண்டு. |
| ரப்பர் விலை | ஐம்பத்தெட்டு. |

ரெங்கோன் விபவ மாசி உக-உ

| | |
|---|---|
| பெரிய மில் அரிசி | [illegible] |
| எஸ். கியூ. „ | [illegible] |
| சிறிய மில் „ | [illegible] |
| மீடன் | [illegible] |
| வெளி விலைகள்: | மார்ச்சு [illegible] |
| „ „ | ஏப்ரல் [illegible] |
| நெல் மாற்றமில்லை. | |
| பவுன் (பழையது) | [illegible] |
| பவுன் (புதியது) | [illegible] |
| தவணைவட்டி. | [illegible] |

—

### லண்டனில் அயல் நாட்டினர்.

லண்டன்மாநகரில் அயல்நாடுகளிலிருந்து வந்து வசிப்போர்களின் தொகை [illegible] எனத்தெரிகிறது.

* * *

### மேயோவின் நாடு.

இந்தியமாதா எனும் நூல் எழுதிய கன்னி மேயோவின் நடாகிய அமெரிக்க ஐக்கிய நாட்டில் எழுதவும் வாசிக்கவும் தெரியாதவர்கள் எண்ணிக்கை ஐம்பது லட்சமெனக் கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது!

* * *

### மனிதன் மூளை.

மனிதனின் மூளை முப்பதாவது வயதில் நன்கு வளர்ச்சி பெறுகின்றதாம். குரங்கின் மூளை இரண்டு வயதிற்குமேல் மூன்று வயதிற்குள் கூடுதல் கனமுள்ளதாகவிருக்கின்றதாம். அதன் பின்னர் வளர்ச்சி பெறாது அதே தன்மையதாகவிருக்கின்றது.

—

ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பாரதத்தாய்,
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
விபவ-ஹு மாசி-மூ ௨௨.

## செங்கற்பட்டுத் : : : : தீர்மானங்கள்.

செங்கற்பட்டு மகாநாட்டைப் பற்றிச் சென்றஇழமை எழுதியிருக்தோம். அம்மகா நாட்டிற் செய்யப்பட்டதீர்மானங்களை ஈண்டு நோக்கலாம். மகா நாட்டின் கொள்கைக்குத் தொடர்பில்லாத அரசியல் சம்பந்தமான சில தீர்மானங்கள் கிடக்க. அது பற்றிய நமது கருத்து, போன இதழில் போந்திருக்கின்றது. சீர்திருத்தத் தீர்மானங்களிற் புகலாம். திருத்தம் பற்றிய தீர்மானங்கள் பல செங்கற்பட்டில் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றுள் பெரும் பகுதி நமக்கு உடன்பாடே. குறிப்பான சில தீர்மானங்களை எடுத்து ஆராயலாம்.

திருத்தத் தீர்மானங்களுள் முதலாவதுசெய்யப்பட்ட தீர்மானம் வகுப்பு வேற்றுமையை ஒழித்தல் பற்றியது. பிறப்பினல் உயர்வு,தாழ்வு இல்லையென்பதும்;பிறப்பு வேற்றுமை கொள்ளும் மதம், அதுகூறும் நூல்கள் ஆகியவற்றை உடன்படலாகாதென்பதும் பிறப்புக் கொண்டு கூறப்படும் வகுப்பை ஏற்றுக் கொள்தல் படாதென்பதும் அத்தீர்மானத்தின் போந்த பொருள். இக் கருத்து நாம் பண்டைப் பழங் காலந் தொட்டுப்பகர்ந்துவரும் ஒன்றேயென்பதைஉலகம் அறியுமாதலின், இத்தீர்மானத்தை நாம் உடன்படுகின்றோமென்றுகூறத்தேவையில்லை.நமதுஊழியனுக்கு முக்கியக்கொள்கை இரண்டு. அவற்றுள் ஒன்று அரசைச் சொந்தமாக்குவது; மற்றொன்று பிறப்பினல் வேற்றுமை கூறப்படும் பொருளற்ற கூற்றை அறவே ஒழிப்பதாகிய இத் தீர்மானம் பற்றியது.

இத் தீர்மானம் இன்றியமையாத ஒன்றாயிருப்பினும் மக்கட்குள்வகுப்புப் பிரிப்பதான ஒன்றுபொருள்கையைவிவாத முறையில் விளத்திச் சான்றுகளோடு அறுதியிட்டு நிலைநாட்டவாரனும்ஆகாதென்பது நமது திட்டமான முடிபு. இக்கொள்கையில் நம்மோடு இச்சுயமரியாதை மகாநாட்டார் ஒன்றியிருக்கின்றார். ஆனல் இன்னர் செயல் இக் கொள்கைக்கு முற்றும் முரணியது. "பிறப்பினல் வகுப்பு இல்லை; அது உண்டு என்னும் கொள்கையை அழிப்பதே எங்கள் தனிப்பெரும் வேலை" என்று கூறும் இவர்களே,செயலில் பிறப்பு வகுப்பை உடன்பட்ட காரியங்கள் நிகழ்த்துகின்றார். "வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம்" என்பதன் பொருள் என்னை? பிறப்புப்பற்றிப் பார்ப்பார் என்பார் சேர்க்கத் தகாதார் என்பது யாது காரணத்தால்? இவைகள் பிறப்பு வகுப்பைக்கொள்ளுவனவா? தள்ளுவனவா? இன்னோரன்ன பிறப்பினல் வகுப்பு உண்டு என்னும் கொள்கையை உடன்படும் செயல்களை, வகுப்பு வேற்றுமையைக் கொல்ல எழுந்த சுயமரியாதைக் கூட்டத்தார் தாங்கி நிற்பது தவறு என்பதை அவ்வன்பர்கள் உணராமை வருந்தத் தக்கது. இதுபற்றிப் பலபட முன்னர் எழுதியிருக்கின்றோம். இத் தீர்மானத்தின் உள்ளக்கிடக்கையை நுனித்துணர்ந்து சுயமரியாதைப் பெயரிய கூட்டத்தார் நடப்பார்களானுல், நலனுண்டு.

பெயரின் பின்னே போட்டுக்கொள்ளும் வகுப்புக் குறிக்கும் பட்டங்களையும் சமயக் குறிகளை அணிதலையும் விட்டுவிட வேண்டுமென்று பொது மக்களைக் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் செய்யப்பட்டிருக்கின்றது. இச் செயல்கள் ஆற்றுதற்குச் சுயமரியாதை மகாநாட்டின் தீர்மானத்தை எதிர்நோக்கி நிற்காமலேயே, பன்னுள் முன்னரே பலர் செயலிற் காட்டி வருகின்றார். இத்தீர்மானத்தின் அமைப்பு நன்ருக இருக்கிறது. இது பொது மக்களைக் கேட்டுக்கொள்வதாகவே செய்யப்பட்டிருக்கின்றது. இச்செயலுக்கு மக்களைத் தூண்டும் பிரசாரம் தேவை. இத்தீர்மானத்தின் அவசியத்தைத் தக்க சான்றுகளோடு அக்கட்சியைச் சார்ந்தோரும் அக்கட்சிப் பத்திரிகைகள்என்று கூறிக்கொள்ளும் பத்திரிகைகளும் விரித்துரைத்தல் கடன்.

மணத்தைப்பற்றி ஒரு தீர்மானஞ் செய்யப்பட்டிருக்கிறது. இத் தீர்மானத்தில் நல்ல கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன. கணவனும் மனைவியும் விரும்பியே மணஞ் செய்தல் வேண்டுமென்பதும்; மாறுபாடு மிகுதியும் தோன்றுங்கால் சம்மதமில்லா நிலையில் வெறுப்பொடு வாழ்க்கை நடாத்த நேருமேல், இடர்ப்பட்டுழலாது தொடர்பை அறுத்துக் கொள்ள இடமிருக்கவேண்டுமென்பதும்;மணவினையில் வீணைப் பொருளைச் செலவு செய்து விருந்தைப் பெருக்குதல் ஆகாதென்பதும் ஆராய்ச்சியாளர் ஒப்ப முடிந்த உண்மையே. மூட நம்பிக்கையைப் பெருக்கும் நூல்களைப் பள்ளிப்பாடமாக வைக்கக் கூடாதென்பதும் ஏற்றுக் கொள்ளத்தக்கதே.

பெண்கள் சமத்துவமாக நடத்தப்பட வேண்டுமென்பதை மதி நுட்பமுடையார் மறுக்கலாற்ருர். பெண்கட்குச் சொத்துரிமை இன்றியமையாது கொடுக்க வேண்டுமென்பது நமது பன்னுள் அவா. இப்பொருளில் இப்பொழுது நாட்டில் வழங்கப்படும் சட்டங்களுள் ஏறக்குறையப் பர்மாச் சட்டமே பொருத்தமுள்ளது என்பது நமது கருத்து. தங்கள் உடலமைப்பிற்கேற்றவகையில் பொருத்தமுள்ள நியாயமான தொழில் அனைத்தும் செய்யும் உரிமை பெண்கட்கு வேண்டுவதே. இது பெண்கள் நலத்தின் பொருட்டு மட்டுமல்ல. ஆண்கள் மெய்யாகவே நலம்பெற வேண்டுமானல் பெண்களை உயர்த்துதல்அவசியம் என்பதை அறிஞர் உணர்ந்தேயிருப்பர்.

சாப்பாட்டுவிடுதி, சிற்றுண்டிச்சாலை ஆகியவற்றில் வகுப்பு வேற்றுமை பாராட்ட இடந்தரலாகாதென்றும் ரயில்வே அதிகாரிகள் இதைப் பெரிதும் கவனித்துத் திருத்தவேண்டுமென்றும் ஒரு தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. ரயில்வே அதிகாரிகளை அடிக்கடி நெருக்கி இவ்வேற்றுமையை ஒழிக்க முயலல் வேண்டும். பெரிய நகரங்களில் இவ்வேற்றுமைபாராட்டா இடங்களைத் தோற்றுவித்து வேற்றுமை காட்டும் நிலையங்களைத் தொலைக்க முந்துதல் வேண்டும். அவ்வாறு செய்தாலன்றி இத்தீர்மானம் ஆக்கிய பயன் எய்துதல் அருமை. தீர்மானங்கள் இன்னும் பலப்பல செய்யப்பட்டிருக்கின்றன.செயலுக்கு எவ்வளவு தூரம் வருமென்பதுதான் வினு? கோவில்கள் மடங்களைப்பற்றி ஒரு தீர்மானம் செய்யப்பட்டிருக்கின்றது. இதில் திருத்தம் ஒன்றுவந்து தோற்கடிக்கப்பட்டிருக்கிறது. இத் தீர்மானத்தில் கூறப்படும் பகுதிகள் அனைத்தும் சரிதானு என்பதை அலசி ஆராய்ந்து கட்டுரையைப் பெருக்குதல் வேண்டாம். இது எவ்வளவு தூரம் செயலில் நடக்கும் என்பது தெரிதல் வேண்டும்.

மகாநாட்டில் மேடைமீதேறி, தீர்மானங்கள் கொணர்ந்து, வீர தீரங்காட்டிச் சொன்மாரி பெய்வோருள்ளேயே பலர் அத்தீர்மானத்தைச் செயலில் காட்டுவதில்லை யென்பதை அவ்வவரின் அணித்தேயுள்ளார் அறிவர். செய்த தீர்மானங்களை அக்கட்சித் தலைவர்கள் என்று தங்களைக்கூறிக் கொள்ளுவாரும் அக்கட்சிப் பத்திரிகைகள் என்று கூறிக்கொள்ளும் பத்திரிகைகளுமாவது தாங்கள் சம்பந்தப்பட்டவரைச் செயலிற் காட்டாவிட்டால் தீர்மானங்கள் செய்வதற்குப் பொருள் உண்டோ? செங்கற்பட்டு மகாநாட்டை உண்மையில் பின்பற்றும் மனிதர்கள்—சுயமரியாதை வீரர்கள்—என்று தங்களைக்கூறிக்கொள்ளும் திரு. ஈ. வெ. இராமசாமியார் சீடர்கள்—அத்தீர்மானங்களின்படி தங்கள் நெற்றியில் திருநீறு, அல்லது திருமண் தீட்டுதல் ஆகாது; திருக்கோவில்கட்கு எக்காரணங்கொண்டும் அரைக்காசும் கொடுத்தல் ஆகாது; தங்கள் பெயர்கட்குப் பின் "செட்டியார்" "பிள்ளை" முதலிய பட்டங்கள் எதையும் கட்டிக் கொள்தல் தகாது; சுயராஜ்யம் என்று சொல்தல் ஆகாது; தீர்மானத்திற் கண்டுள்ள இன்ன பிறவற்றையும் அனுட்டித்தல் வேண்டும். சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்ததாகக் கூறிக்கொள்ளும் பத்திரிகைகள், மதக் குறியாகிய "பிள்ளையார்சுழி, சிவமயம்" போடுதல் ஆகாது; மதத்தைக் காட்டும் சுவாமிகளின் உருவங்களைப் போடுதல் கூடாது; இன்ன பிற செய்தலும் தகாது. மேற்குறித்த அனைத்தும் நமது வேண்டுகோள் அல்ல; அவர்களால் செங்கற்பட்டில் செய்யப்பட்ட தீர்மானங்களின்வேண்டுகோள். செங்கற்பட்டு மகாநாட்டின் முடிவையே ஈண்டுத் திரட்டித் தந்தோம். அம் முடிவை அதைச் சேர்ந்தோராவது—அதினும் பிரமாதமாக அக்கொள்கையைப் பின்பற்றுவோர்என்று தங்களைக் கூறிக்கொள்வோராவது செயலிற் காட்டுகின்றனரா வென்று கண்காணித்தல் பொது மக்கள் கடன். வெளியிடங்களில் தங்கட்குச் சந்தாச் சேர்க்கும்பொழுது "ஊழியனில் பிள்ளையார்சுழி சிவமயம் போடுவதில்லை; ஆதலால் அவற்றைப் போடும் எங்கள் பத்திரிகைக்குச் சந்தாதாரராய்ச் சேருங்கள்; ஊழியனை ஆதரிக்காதேயுங்கள்" என்று சில பத்திரிகையைச் சேர்ந்தோர் சொல்லித் திரிந்ததை ஆங்காங்கு பலர் அறிவர். ஊழியன் என்றும் ஒரேபடி என்பதை எவர்க்கும் கூறவேண்டுவதில்லை. அவ்வாறு வீண் பிரசாரம் செய்த வேடதாரிகள் நிலை இன்று என்ன என்பதை உணர்தல் வேண்டும். இன்னோரன்ன பொருள்களைக் கைவிட்டால் முன் செய்த பிரசாரத்திற்கு முரண் என்பதையும் அவற்றை வைத்துக்கொண்டிருந்தால் சுயமரியாதைப் பேச்சுக்கு மாறுபாடு என்பதையும் எவரும் மறந்துவிடுதல் ஆகா. எனவே, அன்னுர் இடத்திற்கேற்ற வேடந்தரித்து விளங்குகின்றார். சிலரைக்கண்டால் "சுயமரியாதை சுயமரியாதை" என்று சொல்லுகின்றார். வேறு சிலரைக் கண்டால் அவர்க்கேற்றபடி விள்ளுகின்றார். சைமன் கமிஷனுக்கும் அரசியலுக்கும் சம்பந்தமில்லையென்று பத்திரிகையில் எழுதக்கூடச் சிலர் முற்பட்டுவிட்டாரென்றால், அதைவிட வேறு என்ன ஏமாற்றம் வேண்டும்? சுயமரியாதை இயக்கத்தை மெய்யாகவே பின்பற்றுமல்—அம் மகாநாட்டுத் தீர்மானங்களை அநுட்டிக்காமல்—ஏமாற்றித் திரியும் வேடதாரிகளுக்கு ஏற்ற புத்தி கற்பித்தல் உண்மைச் சுயமரியாதைக் குழுவினர்க்கு—சிறப்பாக அதன் கர்த்தாவாகிய இராமசாமியார்க்கு முதற்கடன் என்பதை நண்பர் இராமசாமியாரும் மறுக்கமாட்டார் என நம்புகிறோம்.

## வரவுக்குமேல்செலவா?

இம்மாதம் ௨௬-ந் தேதி, சென்னைப் பொருளாதார அங்கத்தினரான கனம். மாயிர், சென்னைச் சட்ட சபையில், அரசாங்கத்தின் ௧௯௨௯-௩௦ ஆண்டின் "பட்ஜெட்" டை (வரவு செலவுத் திட்டம்) ஆஜர் செய்தார். அப்பொழுது அவர் ஓர் சொற்பொழிவும் நிகழ்த்தியிருக்கிறார். சென்னை வரவு செலவுத் திட்டத்தைப் பார்க்கும் பொழுது, முதல் முதலாகக் கண்ணில் தெள்ளிதிற் புலப்படக்கூடிய ஓர் விஷயம், வரவுக்கு மிஞ்சிய செலவு ஆகும்.

ஓர் பெயர்பெற்ற நவீனகாசிரியர் கூறிய ஓர் விஷயம் இங்கு நமக்கு நினைவுக்கு வருகின்றது. "வருஷ வரும்படி ௨௦ பவுன்; வருஷச் செலவு ௧௯ பவுன், ஷில்லிங் ௧௯ பென்ஸ்; மிகுவது இன்பம். வருஷ வரும்படி ௨௦-பவுன்; வருஷச் செலவு ௨௦ பவுன் ௧ பென்னி; மிகுவது துன்பம்"—இவ்வாறு அவ்வாசிரியர் கூறியுள்ளார். பொருளாதார விஷயத்தில் இது ஓர் மகத்தான உண்மையாகும். முடைக்குக் காரணம் வரவுக்கு மிஞ்சிய செலவேயாகும். நமது சென்னை அரசாங்கத்தார் ௧௯௨௯-௩௦-ம் ஆண்டிற்குத் தயாரித்திருக்கும் வரவு செலவுத் திட்டப்படி, வருமானங்களின் மொத்தம் ஏறக்குறைய ௧௬-கோடியே ௭-லட்ச ரூபாயாகும். ஆனல் மொத்தச் செலவோ சுமார் ௧௬-கோடியே ௬௩-லட்ச ரூபாயாகும். எனவே, ௫௬ லட்ச ரூபாய் குறை விழுகிறது. இவ்வாறு குறை விழுவதை எவ்வாறு சமாளித்துக் கொள்ளுவது என்பதை திரு. மாயிர் விளக்கியிருக்கிறார். சென்ற வருட மிகுதியான ஆரம்ப இருப்பு சுமார் ௬௮ லட்ச ரூபாயிருக்கிறது. இத் தொகையிலிருந்து, மேற்படி ௫௬-லட்சத்தை ஈடு செய்துவிடலாமென்று அவர் கூறுகிறார். ஆரம்ப இருப்பை இவ்வாறு ஆண்டுதோறும் செலவு செய்துகொண்டேயிருந்தால், அரசாங்கம் ஐந்தாறு ஆண்டுகளில் "இன்ஸால்வென்ட்" ஆக வேண்டியதுதான் என்பதைச் சொல்லவாவேண்டும்?

ஆனல், இத்திட்டப்படியே, உண்மையிலே, வரவும் செலவும், நடைமுதல் ஆண்டில் நடைபெறுமா என்பதை நாம் கவனிக்கலாம். இத்திட்டத்தின்மீது பின்னல் விவாதம் நடைபெற்றபொழுது, திரு. எ. அரங்கனுக முதலியார் ஓர் உண்மையை உரைத்தார். எப்பொழுதும் வரவுத் திட்டத்தைக் குறைவாகவும், செலவுத் திட்டத்தை உயர்த்தியும் காண்பிப்பதை அரசாங்கத்தின் மாற்றப்படா இலாகாப் பாதி கைக்கொண்டிருப்பதை அவர் கண்டிக்கின்றார். மாற்றப்பட்ட இலாக்காக்களின் தலைவர்களான மந்திரிகளுக்கு, மற்றைப் பாதி அரசாங்கத்தார், இவ்வாறு முடை காட்டி, மிரட்டுவது தவறேயாகும். திரு. அரங்கனுக முதலியார் மாஜி மந்திரி. எனவே, அவருக்கு நேரே அநுபவமிருக்கிறது. ஆகவின் அவரது உரைக்கு நல்ல மதிப்பளிக்கவேண்டும். அன்றியும், ௧௯௨௭-௨௮-ம்ஆண்டு வரவுசெலவை நோக்கும்பொழுது,இது உண்மையெனவே விளங்குகிறது. அவ்வாண்டின் வரவு, திட்டத்திற்குமேல் ௬௮-லட்ச ரூபாய்க்கு அதிகமாக வந்திருப்பதாகவும், செலவோ திட்டத்தினும் சுமார் ௬௦-லட்ச ரூபாய் குறைந்துவிட்டதாகவும், திரு. மாயிர் அவர்களே கூறுகிறார். எனவே, திரு. அரங்கனுத முதலியார் கூறுவதில் உண்மையில்லாமலில்லை.

மேலும், ஸ்தல ஸ்தாபனங்களுக்கென அவ்வாண்டு ஒதுக்கிவைக்கப்பட்ட மானியங்கள் பூராவும் செலவழிக்கப்படாததாலும் இன்னும் பிற செலவுக் குறைவாலும், இருப்பு மிகுத்தது என்றும் அவர் கூறுகிறார். தங்களுக்கென அனுமதிக்கப்பட்ட மான்யங்களை (கிராண்டுகள்) ஸ்தல ஸ்தாபனங்கள் பெற்று உபயோகிக்க முடியாதவாறு அவை ஆண்டு இறுதியில் அனுமதிக்கப்பட்டன என்று விவாதத்தின்பொழுது திரு. ரத்தின சபாபதி முதலியார் விளக்கியிருக்கிறார். ஆனல், பொருளாதார அங்கத்தினர் பேச்சைமட்டும் படித்தால், ஸ்தல ஸ்தாபனங்கள் மீதேதான் குறையிருப்பதாக, ஒருவருக்குத் தோன்றும் அரசாங்கத்தார் இவ்வாறு செப்படுவித்தை செய்வது சரியென்று யார்தான் கூறுவர்?

நிற்க, மதுவிலக்குப் பிரசாரத்திற்காக, ௬-லட்ச ரூபாய் ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கிறது என்று திரு. மாயிர் கூறுகிறார். கலால் வருமானத்தை எதுவரையில் அரசாங்கம் சார்ந்திருக்கிறதோ,அதுவரையில்,சர்க்காரின் மதுவிலக்குப் பிரசாரத்தினல் பயன் ஏற்படுமென நாம் கருதவில்லை. திரு. ஸி. இராஜகோபாலாச்சாரியாரவர்களால் ஏற்கனவே தயாரிக்கப்பட்டு, "இளமை இந்தியா"வில் வெளியிடப்பெற்றதுபோன்ற ஓர் சட்டமியற்றி, ஒன்றிரண்டு ஜில்லாக்களைப் பொறுக்கி, அங்கு பூர்ண மதுவிலக்கைக் கொண்டு வருவதுதான், சரியான பரிகாரமாகும். பொதுவாக,சென்னை"பட்ஜெட்" முற்றிலும் அதிருப்திகரமானது என்றே கூறவேண்டும்.

## இடி முழக்கம்.

### இனிது முடிந்தது.

சைமன் கமிஷனுக்கு சென்னை நகரக் கார்ப்பொரேஷனின் உபசாரப் பத்திரத்தைப் படித்துக் கொடுத்தது சம்பந்தமாக, தலைவர் திரு. எ. ராமசாமியார் பிழையையும், சில அங்கத்தினர் இதன் பேரில், கார்ப்பொரேஷன் கூட்டத்தில் ஒழுங்கீனமாக நடந்துகொண்டதையும் பற்றிச் சென்ற வாரம் குறிப்பிட்டிருந்தோம். பிப்ரவரி-மீ ௨௭௨ கார்ப்பொரேஷனின் "பட்ஜெட்"டைப் பற்றி விவாதிக்க ஓர் விசேஷக் கூட்டம் கூட்டப் பெற்றது. அப்பொழுது, திரு. எ. ராமசாமியாரும், முன் கூட்டத்தில் ஒழுங்குத் தவருக நடந்துகொண்ட சில அங்கத்தவரும் பரஸ்பரம் தங்கள் பிழைக்கு வருந்துவதாகத் தெரிவித்துக் கொண்டதால், கார்ப்பொரேஷனில், சமாதான நிலைமை ஏற்பட்டது என்று இங்குக்குறிப்பிட, சந்தோஷிக்கிறோம். இக்கூட்டத்தில் திரு. எ. ராமசாமியார் மிகவும் புத்திசாலித்தனமாக நடந்து கொண்டு, சிலர் தடை முயற்சிகளை வியர்த்தமாகச் செய்து, நிகழ்ந்துவிட்ட பிழை ஒழுங்குபடச் சமாதானம் ஏற்படச் செய்துள்ளார் என்பது மகிழ்ச்சியளிக்கும் செய்தியே யல்லவா?

### இந்தியா "பட்ஜட்"

இந்திய அரசாங்கத்தின் ௧௯௨௯—௩௦-ம் ஆண்டின் "பட்ஜட்"டை (வரவு செலவுத் திட்டம்) இந்தியச் சட்டசபையில், பொருளாதார அங்கத்தினர் ஸர் ஜார்ஜ் ருஸ்டர் ஆஜர் செய்தார். திட்டம் போடப்பட்டிருக்கும் செலவு மொத்தம் சுமார் ௧௩௬ கோடியே ஆறுலட்ச ரூபாயாகும். ஆனல் வருமானமோ, இதினும் தொண்ணூறு லட்சம் குறைவாகும். எனவே, ரெவின்யூ சேமநிதியிலிருந்து (ரெவின்யூ ரிஸர்வ் பண்டு) சுமார் ௯௦-லட்சம் ரூபாய் எடுத்துச் செலவழிக்க வேண்டியதாகும். இதுவும் சென்னை அரசாங்க வரவு செலவுத் திட்டத்தை போலவேயிருக்கிறது. இந்த ஆபத்துக்குப் பரிகாரமாக, மகாணக் கப்பவஜாவை மறுபடியும் புதுப்பித்து விடவேண்டும், அல்லது புதிய வரிகள் ஏதாவது கண்டுபிடிக்க வேண்டும் என்று ஸர் ருஸ்டர் கூறுகிறார். செலவினங்களில் புத்திசாலித்தனத்துடன் சிக்கனம் செய்வதை விட்டு, இந்த யோசனை செய்தல் முற்றிலும் தவருகும்.

### ஓர் புதிய வழி!

இந்தியாவின் சுயராஜ்யக் கோரிக்கையைப் பூர்த்தி செய்துகொள்ள ஓர் புதிய வழி, திரு. ஸி. விஜயராகவாச்சாரியாரால் கூறப்பட்டுளது. திரு. விஜயராகவாச்சாரியாருக்கும் அவாது நண்பரொருவருக்கும் விரிவாக நடந்திருக்கும் ஓர் சம்பாஷணையின் விவரம் "இந்து"வின் சென்ற சனிக்கிழமை இதழில் வெளியாயிருக்கிறது. சர்வதேசச் சங்கத்திற்கு (லீக் அவ் நேஷன்ஸ்) இந்தியாவின் கோரிக்கை தெரிவிக்கப்படவேண்டும் என்பது அவரது யோசனை. சர்வதேசச் சங்கத்தில், இந்தியாவுக்கும்ஓர் உறுப்பினர்பதவியளிக்கப்பட்டிருக்கின்றது. திரு. விஜயராகவாச்சாரியாரவர்களின் யோசனை மிகவும் உருசிகரமாகவிருக்கின்றது. சர்வதேசச் சங்கத்தில் இந்தியாவின் சுயராஜ்யக் கோரிக்கை, விஷயத்தை இந்தியப் பிரதிநிதியாலோ, பிரிட்டிஷ் பிரதிநிதியாலோ, அச்சங்கத்தின் சில் விதிகளின் கீழ், தெரிவித்துக் கொள்ளலாம் என்கிறார். இங்ஙனம் நடவாவிட்டால், பிற நாட்டுப் பிரதிநிகளுள் எவராவது ஒருவரைக் கொண்டு, இதனை எழுப்பலாம் என்பது அவரது அடுத்த வழி. இல்லையாயின், இந்தியாவின் சர்வகட்சி மகாநாடோ அல்லது தேசியக் காங்கிரஸோ, நேரே சர்வதேசச் சங்கத்திற்கு இக்கோரிக்கையை விடுத்துக்கொள்ளலாம் என்கிறார். உலகக் கூட்டுறவில் நம்பிக்கையுள்ள நமக்கு, திரு. விஜயராகவாச்சாரியாரின் யோசனையின் நோக்கம் உயர்ந்ததே என்று தோன்றுகிறது. ஆனல், ஒரு ஆண்டு கழியினுங்கூட குடியேற்ற நாட்டு அந்தஸ்தையே நமது கோரிக்கையாக, அச்சங்கத்திற்கு அறிவிக்க வேண்டுமென்று அவர் கூறுவதை நாம் ஏற்க வியலவில்லை. ஏனெனில், நமது பின்வலுவைச் சமைப்பதிலும் நமக்கு நம்பிக்கையுண்டு.



## பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கம்.

ராஜா சர் அண்ணுமலைக்கு வாழ்த்து.

காரியதரிசி தந்திமூலம் அறிவிப்பதாவது:—

௧௯௨௯ மார்ச்சு மாசம் ௧-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை மணி ௬-௩௦க்கு சங்கக் கட்டிடத்தின்கண், சர் அண்ணுமலை செட்டியார் அவர்கட்கு (இந்திய அரசாங்க சபை அங்கத்தினர்) பரம்பரையாக ராஜா ஸ்தானம் அரசாங்கத்தாரால் கொடுத்ததைப் பாராட்டும் பொருட்டு ஓர் அவசர விசேஷக் கூட்டம் கூட்டப்பட்டது. பெருந்திரளான மக்கள் கூடியிருந்தனர். சபையோர்களின் விருப்பப்படி திருவாளர் வீ. தெ. இராமன்செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார். வந்திருந்தவர்களில் பர்மா நாட்டிற்கு, தற்போது விஜயஞ் செய்திருக்கும் திவான்பகதூர் அ. மு. முருகப்ப செட்டியார் அவர்கள் எம். எல். ஸி. முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர்.

தலைவரவர்கள் ராஜா சர் அண்ணுமலை அவர்கள் பெருமைகளைப் பலவாறு புகழ்துரைத்து, தென் இந்தியாவில் அவர் செய்துள்ள பல அறச் செயல்கட்கும் முக்கியமாக, கல்வி வகைக்காக அவர் செய்துள்ள தருமங்கட்கும் ராஜா சர் அண்ணுமலையின் பெயர் எல்லோரிடையிலும் சர்வ சாதாரணமாகப் பரந்துள்ளது எனக் கூறினர். சிதம்பரத்தில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திற்காக அவர் கொடுத்துள்ள பெருங் கொடையானது, என்றுமே மறத்தற் குரியதல்ல வெனவும் குறிப்பிட்டார். பின்னர், செட்டியார் சமூகத்தினரும், சிறப்பாக நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கத்தாரும் தங்கள் வகுப்பைச் சார்ந்த ஓர் சிறந்த அங்கத்தினருக்கு அளிக்கப்பட்ட கௌரவத்திற்காகப் பெரிதும் மகிழ்ச்சியடைவதாகவும், தங்கள் மகிழ்ச்சியைப் பரம்பரையாக ராஜா பட்டம்பெற்ற ராஜா சர் அண்ணுமலை செட்டியார் அவர்கட்கு அறிவிப்பதாகவும், சென்னை கவர்னருக்கும் ராஜா அண்ணுமலைக்கும் இத்தீர்மானங்களைத் தந்திமூலம் அனுப்புவதாகவும் தீர்மானிக்கப்பட்டது.

## உள்ளூர்.

| | |
|---|---|
| செய்கோன் வட்டம் | ௨-௭-௦ |
| சிங்கப்பூர் வட்டம் | ௧-௧௨-௦ |
| பினங்கு வட்டம் | ௧-௧௨-௦ |
| கொழும்பு வட்டம் | ௦-௰-௦ |
| சென்னை உண்டியல் வட்டம் | ௦-௨-௬ |
| ஷை மாசி வட்டி | ௦-௧௧-௦ |
| ஈப்போ வட்டம் | ௨-௦-௦ |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௦-௰-௦ |
| பவுன்விலை | ௧௩-௮-௯ |
| வெள்ளி விலை | ௦-௯-௯ |

கருட சேவை:—இம்மதி ௨௫-ம் நாள் வெள்ளிக்கிழமை இரவு அரியக்குடி சீனிவாசப் பெருமான் சுவாமிக்கு காரைக்குடி திரு நா. கு. இராமநாதன் செட்டியார் அவர்களால் கருட சேர்வை நடாத்தப்படும் என அறிவிக்கப் படுகிறது.

சித்த வைத்திய தர்ம வைத்திய சாலை:—சென்னை மாகாண சித்த வைத்தியக் கிளைச் சங்கச் சார்பில் நடைபெறும் தர்ம வைத்தியசாலையில் சென்ற பிப்ரவரி மாதத்தில் ௩௯௨ பேர்கள் சிகிச்சை செய்யப்பட்டார்களென, சங்கத்தலைவர் கரு. சுப. வேடப்ப சேர்வை எழுதுகிறார்.

ஆயுர்வேத வைத்தியசாலை:—M. S. S. P. சுப்பிரமணியன் ஆயுர்வேத தர்ம வைத்தியசாலையில் சென்ற பெப்ரவரி மாதத்தில் சிகிச்சை செய்யப்பட்ட இந்துக்கள் ௬௨௪ முகம்மதியர் ௩௦ கிருஸ்தவர்கள் ௩௮ என்றும் டாக்டர் கோவிந்தராஜுலு அறிவிக்கிருர்.

நிலாவிழா:— சென்ற வெள்ளிக்கிழமை இரவு காரைக்குடி கீழத்தெருவில் இவ்வூர் நாட்டார்களால் நிலாவண்டை என்னும் விழா மிகவும் விமரிசையாய் நடத்தப்பட்டது. அவ்வமயம் இவ்வூர் நல்லுரிமைத் தொண்டர் சங்கச் சார்பில் சிராவயல் காந்தி ஆசிரம மாணவ மாணவிகள் ஓர் இனிய நாடகமும் இன்னிசை உடற்பயிற்சியும் நடத்தினர். ஷை ஆசிரம தலைமை ஆசிரியர் திரு ப. ஜீவானந்தன் அவர்கள் தலைமையில் திருவாளர்கள், குமரன் துணையாசிரியர் ஆ. சுப்பையா ஷை ஆசிரம இளங்கோ என்னும் மாணவன் சி. பெரி. சி. மெய்யப்ப ஆகியவர்கள் முறையே கல்வி, இளந்தமிழன் பெண் கல்வி என்னும் பொருள் பற்றி சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்கள், தலைவர் முடிவுரையுடன் கூட்டம் இனிது முடிவுற்றது. சுவாமி தரிசனத்தின்பின் பூமாலை காளகஞ்சி மரியாதை முதலிய சிற்றுண்டிகள் வழங்கப்பெற்றது.

## லஜபதி நூல் நிலையத் திறப்புவிழா.

காரைக்குடி நல உரிமைத் தொண்டர் சங்கத்தின் ஆதரவில் நிகழும் விபவ வருஷம் மாசி மாசம் ௨௫-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை ௫-மணிக்கு சங்கக் கட்டிடத்தின் கண் "லஜபதி நூல் நிலையம்", "ஊழியன்" பத்திரிகை ஆசிரியர் திரு மிகு ராய. சொக்கலிங்கன் அவர்களால், திறக்கப்படும். அத்தருணம் சிராவயல் ப. ஜீவானந்தன், சையத்முகம்மது அம்பலம், பள்ளத்தூர் அருணகிரி ஆசிரியர் திரு. ராமனுஜன் ஆகியவர்கள் சொற்பெருக்கு நிகழ்த்துவார்களென, காரியதரிசி சி. பெரி. சி. மெய்யப்பன் எழுதுகிறார்.

### பெண்தபால் அதிகாரி.

சல்கார் என்ற ஊரில் ஓர் பெண் தபால் ஆப்பீஸ் அதிபர் இருக்கிறாராம். அவளுக்கு தற்போது வயது ௬௬. அவள் இவ்வுத்தியோகத்தில் ௪௩-வருடத்திற்கு முன் நியமிக்கப் பட்டாளாம்.

### திருவனந்தபுரத்தில் மின்சார விளக்கு.

பிப்ரவரி ௨௭-ம் திருவனந்தபுரத்தில் மின்சார விளக்குகள் போடப்பட்டன. திவான் வாட்ஸ் துரை அவர்கள் மின்சார பவர் நிலையத்தின் துவக்க விழா ஆற்றினர்.

### திலகர்சிலைத் திறப்புவிழா.

பிப்ரவரி ௨௮-ம் நாள் அகமதாபாத் விக்டோரியா கார்டனில் திலகர் பெருமான் உருவச்சிலை, காந்தியடிகளால் திறந்து வைக்கப்பட்டது. பின்னர் முனிசிபல் கட்டிடத்தில் தேசீயக்கொடியும் ஏற்றப்பட்டது.

